Regd. No. TN-MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 0-TN-MS C. P. P. 55

**என் ஆசை**

ஏழைகளுக்கு சேவை செய்ய வேண்டுமென்பதே என் உள்ளத்தின் ஆசை. அதனால்தான் அவர்களில் ஒருவனாக என்னைஆக்கிக்கொள்ள முடிந்தது.

—பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**இலட்சிய விலை**

பொதுத் தொண்டு செய்பவனுக்குஏற்படும் தொல்லைகள் அவன் தனது இலட்சியத்துக் கொடுக்கும் விலையாகும்.

—தந்தை பெரியார்

மலர் : 9 சென்னை 21-4-1985 ஞாயிறு ★ ★ ★ வெளியூர் 22-4-1985 திங்கள் இதழ் 183

## ★ மீனவர் நலம்காக்க புரட்சித்தலைவர் சீரிய நடவடிக்கை

## ஏற்றுமதி தொடர்ந்திட - ஏழை மீனவர்கள் மகிழ்ந்திட

# இரால் மீன் வரி ரத்து

## கோரிக்கைகளை ஏற்று மீனவ நண்பனாம் புரட்சித்தலைவர் உறுதி

சென்னை, ஏப். 21- இரால் மீன் மீது விதிக்கப்பட்ட விற்பனை வரியை ரத்து செய்ய வேண்டும் என்று கோரிக்கைகள் வந்ததைத் தொடர்ந்து அதுபற்றி இறுதி முடிவு எடுக்கும் வரை அந்த வரி விதிப்பு பற்றிய அரசாணை செயல்படுவது நிறுத்தி வைக்கப்படும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் உறுதி அளித்துள்ளார். ஏழை - எளிய மீனவர்களை வாழவைக்கும் புரட்சித்தலைவரின் இந்த நடவடிக்கைக்காக குமரி அனந்தனும் மற்றும் பல்வேறு தரப்பினரும் நன்றி தெரிவித்தனர்.

இரால்மீன் மீது விதிக்கப்பட்டுள்ள விற்பனை வரியினால் மீனவர்கள் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள் என்றும், தமிழகத்தில் இரால் மீன் ஏற்றுமதி இதனால் பாதிக்கப்படும் அபாயம் ஏற்பட்டுள்ளதுஎன்றும் மீனவ சமுதாயத்தின் பிரதிநிதிகளும் ஏற்றுமதியாளர்களும் அரசுக்கு முறையீடு செய்துள்ளனர்.

சட்டமன்ற உறுப்பினர் குமரிஅனந்தன் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்து இரால் மீன்கள் மீதான வரி விதிப்பினால் சுமார் ரூ. 100 கோடி பெறுமான இரால்மீன் ஏற்றுமதி பாதிக்கப்படும் என்றும் பல்லாயிரக்கணக்கான மீனவர்கள்வேலை வாய்ப்பை இழக்கநேரிடும் என்றும்எடுத்துக்கூறிஇந்த வரிவிதிப்பு குறித்து அரசு மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்று முதலமைச்சரிடம் கேட்டுக்கொண்டார்.

மேலும் மீனவர்களுக்கு வீட்டு வசதி கட்டு மர மீனவர்களுக்கு சட்ட ரீதியான பாதுகாப்பு மற்றும் ராமேஸ்வரம் பகுதி மீனவர்களுக்கு கடலில் மீன் பிடிக்க போதிய பாதுகாப்பு ஏற்பாடுகள் ஆகியவை பற்றியும் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் முதல்வர் புரட்சித்தலைவரை கேட்டுக்கொண்டார்.

முதல்வர் புரட்சித் தலைவர் மீனவர்கள் நலம் பாதிக்கப்படா வண்ணம் அரசு இந்த வரி விதிப்பு குறித்து நிச்சயம் மறுபரிசீலனை செய்யுமென்றும் அவ்வாறு மறு பரிசீலனை செய்து இறுதி முடிவு எடுக்கும் வரை சம்பந்தப்பட்ட அரசாணை செயல்படுவது நிறுத்திவைக்கப்படுமென்றும் உறுதி அளித்தார்கள்,

இதர கோரிக்கைகள் பற்றி அரசு உரிய நடவடிக்கைகள் மேற்கொண்டுள்ளது என்றும் தெரிவித்தார்கள்.

குமரிஅனந்தன் மீனவர்களின் சார்பாக மாண்புமிகு முதலமைச்சர் அவர்களுக்கு நன்றி தெரிவித்தார்.

## சரக்கு ரயில் தடம் புரண்டது

பெங்களூர், ஏப். 21- பங்காருபேட்டை, ஜோலார்பேட்டை ஆகியவற்றிற்கிடையே நேற்று இரவு சரக்குரெயில்வண்டி ஒன்று தடம் புரண்டது. இதனால் அந்த தடத்தில் செல்லும் பல ரெயில்களின் போக்குவரத்துபாதிக்கப்பட்டது. சென்னை, பெங்களூர், திருனந்தபுரம் மார்க்கத்தில் இந்த பாதிப்பு ஏற்பட்டது. இதனால் பெங்களூர் வந்து சேர வேண்டிய ரெயில்களும் தாமதமாக வந்து சேர்ந்தன. பல ரெயில்களும் ரத்துசெய்யப்பட்டதால் பயணிகள் அவதிக்குள்ளாயினர். இன்றுமாலை போக்குவரத்து சகஜ நிலைக்கு திரும்பும் என எதிர்ப்பார்க்கப்படுவதாக ரெயில்வே அதிகாரி ஒருவர் கூறினார்.

★★

## திருச்செந்தூர் இடைத்தேர்தல்: மார்க்கபந்து வேண்டுகோள்

மதுரை, ஏப். 21... வரும் 24-ந்தேதி நடைபெறும் திருச்செந்தூர் நாடாளுமன்ற இடைத்தேர்தலில்கழகம், காங்கிரஸ்அணிவேட்பாளராக போட்டியிடும் தனுஷ்கோடி ஆதித்தனை மாபெரும் வெற்றி பெறச் செய்யுமாறு உழைப்பாளர்முன்னேற்ற கட்சித் தலைவர் மார்க்கபந்து வேண்டுகோள் விடுத்துள்ளார்.

இது குறித்து அவர் விடுத்துள்ள அறிக்கையில், நாடு போற்றும் நாயகர் புரட்சித்தலைவரின் வேண்டுகோள் வேதமென நிரூபிக்க தனுஷ்கோடி ஆதித்தன் வெற்றிக்கு அயராது பாடுபடுமாறு தன் கட்சி தோழர்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

உழைப்பாளர்முன்னேற்ற கட்சியை சேர்ந்த திண்டுக்கல் பாலையா, சுந்தரம் ராமய்யா, ஆகியோர் திருச்செந்தூர் இடைத்தேர்தலில் தனுஷ்கோடி ஆதித்தன் வெற்றிக்கு [illegible]

வருவதாகவும், அவருடன் மற்றவர்களும் இணைந்து பணியாற்றுமாறு மார்க்கபந்து கேட்டுக்கொண் [illegible]

திருச்செந்தூர் தேர்தல்:

இ. காங்கிரசுக்கு

## கிறித்துவ ஜனநாயக முன்னணி ஆதரவு

சென்னை, ஏப். 21- திருச்செந்தூர் தொகுதி நாடாளுமன்ற இடைத் தேர்தலில் போட்டியிடும் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தனுக்கு கிறித்துவ ஜனநாயக முன்னணி ஆதரவு அளிக்கும் என அக்கட்சியின் தலைவர் பிரான்சிஸ் ராயன் தெரிவித்துள்ளார்.

எஸ். எம். ஸ்டீபன் பெர்னாண்டோ தலைமையில் தேர்தல் பிரச்சார குழு ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளதாகவும்பிரான்சிஸ்ராயன் தெவித்துள்ளார்.

## கொடிக்கால் விவசாயிகள் ஆதரவு

சென்னை, ஏப். 21- தமிழ்நாடு கொடிக்கால் விவசாயிகள் சங்கத்தின் பொதுச்செயலாளர் எஸ்.எஸ். சூரிய நாரயாணன் விடுத்துள்ள ஒரு அறிக்கையில், திருச்செந்தூர் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தனை ஆதரிப்பது எனசங்க ஆட்சி மன்றக் குழுமுடிவுசெய்திருப்பதாக தெரிவித்துள்ளார்

**தலைமைக் கழக அறிவிப்பு**

பொதுத்தேர்தலின் போது கழக வேட்பாளர் - தோழமைக் கட்சி வேட்பாளர் ஆகியோரை எதிர்த்துப் போட்டியிட்ட - மற்றும் தோழமை அணிக்கு எதிராகப் பணியாற்றிய தாகக் கூறப்பட்ட புகாரின் மீது கழகத்தில் இருந்து நீக்கப்பட்டுள்ளவர்கள் தங்களை கழகத்தில் இணைத்துக் கொள்ளவேண்டும் என்று விண்ணப்பித்திருக்கிறார்கள்.

இதுகுறித்து பரிசீலித்து முடிவு எடுப்பதற்காக

திருமிகு ஈ. வெ. அ. வள்ளிமுத்து எம். எல். சி. (கழக அவைத் தலைவர்)

திருமிகு அனகாபுத்தூர் ராமலிங்கம் எம். எல். ஏ.

திருமிகு பா. அங்கமுத்து எம். எல். ஏ.

ஆகியோரைக் கொண்ட ஆய்வுக்குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

இந்தக் குழு தனது விசாரணையை சென்னையில் உடனடியாகத் தொடங்கி நடத்தி பரிந்துரையை ஒருமாத காலத்திற்குள் தலைமைக் கழகத்திற்கு அளிக்கும்.

இந்தப் பரிந்துரையின் மீது இதயதெய்வம் மாண்புமிகு டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் முடிவு எடுப்பார்கள்.

இதயதெய்வம் மாண்புமிகு டாக்டர் புரட்சித்தலைவர் அவர்களின் அனுமதியுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

சென்னை-14
21-4-85

எஸ். இராகவானந்தம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

## ★ தோழமைக்கு இலக்கணம் கூறிய தேர்தல்கூட்டு
## ★ கழகத்தவர் பணிகண்டு மாற்றார் மருண்டனர்
## ★ இ.காங்கிரஸ் வெற்றியை உறுதி செய்யும் மக்கள் எழுச்சி

## திருச்செந்தூர் தொகுதியில்

# பிரச்சாரம் ஓய்கிறது

திருச்செந்தூர், ஏப். 21- திருச்செந்தூர் தொகுதி நாடாளுமன்ற தேர்தலில் தோழமைக் கட்சியான காங்கிரஸ் வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தன் வெற்றிபெற கழகத்தோழர்கள் பம்பரமென சுழன்று பணியாற்றி வருகின்றனர்.

**தேர்தல் பிரச்சாரம் நாளை(திங்கட்கிழமை) முடிவடைகிறது. காங்கிரசின் வெற்றிவாய்ப்பு பிரகாசமாக உள்ளது**

திருச்செந்தூர் நாடாளுமன்றத்தொகுதியில் வரும் 24ந்தேதி (புதன் கிழமை) வாக்குப்பதிவு நடைபெற இருப்பது தெரிந்ததே.

இ. காங்கிரஸ வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தன் மாபெரும் வெற்றி பெறுவதற்காக புரட்சித்தலைவரின் ஆணையேற்று கழகத் தோழர்கள் கண் துஞ்சாது, பசிநோக்காது கடமையே கண்ணெனக் கருதி அயராது பாடுபட்டு வருகின்றனர். எங்கும் மக்களின் ஆதரவு காங்கிரசின் பக்கமே இருப்பது பட்டவர்த்தனமாக தெரிகிறது.

புரட்சித்தலைவர் மீது உயிரைய வைத்துள்ள திருச்செந்தூர் தொகுதி மக்கள் தங்கள் முழு ஆதரவையும் புரட்சித் தலைவர் அடையாளம் காட்டியுள்ள தனுஷ்கோடி ஆதித்தனுக்கு வழங்க சபதம் பூண்டுள்ளனர்.

அமைச்சர்கள்நாவலர், பண்ருட்டி ராமச்சந்திரன், கே,ஏ.கே., அரங்கநாயகம், முத்துசாமி, டெல்லி சிறப்பு பிரதிநிதி ஜி.ஆர். எட்மண்ட், மாவட்டச் செயலாளர் கருப்பசாமி பாண்டியன், ஆகியோர் கொண்டகழகத் தேர்தல் பணிக்குழுவினர் முறைவகுத்துதனுஷ்கோடி ஆதித்தன் வெற்றிக்கு தீவிரமாக பாடுபட்டு வருகின்றனர்.

மற்றும் அமைச்சர்கள் திருநாவுக்கரசு, யூசுப், ஆனூர் ஜெகதீசன் ஆகியோரும் கழகத்தின் ஆதரவு பெற்ற வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தன் வெற்றிக்காக கடுமையாக பாடுபட்டுள்ளனர்.

கொளுத்தும் கோடை வெயிலையும் பொருட்படுத்தாது அனல் பறக்கும் வகையில் நடந்த பிரச்சாரம் நாளை(22ந்தேதி) யுடன் ஓய்கிறது.

24-ந்தேதி (புதன் கிழமை)காலை 8 மணிக்கு வாக்குப்பதிவு துவங்கிபிற பகல் 4மணிவரைவாக்குப் பதிவு நடைபெறுகிறது.

# பொன்மனச் செம்மல்

அவர்களுக்கு

## நல்வாழ்த்துக்கள்! நன்றி!!

## இரால் மீன்மீது விதிக்கப்பட்டுள்ள விற்பனை வரி விதிப்பு குறித்து மறு பரிசீலனை செய்யவும், இறுதி முடிவு எடுக்கும்வரை விற்பனை வரியினை நிறுத்திவைக்கவும் உறுதி அளித்துள்ள

மாண்புமிகு தமிழக முதல்வர்

## டாக்டர் புரட்சித்தலைவர்

அவர்களுக்கு

## எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்

## நன்றி! நன்றி!! நன்றி!!!



## அண்ணா மீன பிடிப்போர் மற்றும் விற்பனையாளர் சங்கம்

நாகப்பட்டினம்.

---

மாண்புமிகு முதல்வருக்கு நன்றி!

இரால் மீன் மீது விதிக்கப்பட்டுள்ள வரியினை நிறுத்திவைத்து எங்களுக்கு உதவி செய்த

**பொன்மனச்செம்மல் தமிழக முதல்வர் அவர்களுக்கும்**

தமிழக அரசிற்கும் எங்கள் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## திருச்சி மாவட்ட அண்ணா மீன் பிடிக்கும் தொழிலாளர் சங்கம்

---

மீனவ நண்பன் தமிழக முதல்வருக்கு நன்றி!

இரால் மீன் மீது விதிக்கப்பட்டுள்ள வரி விதிப்பை மறுபரிசீலனை செய்யவும் முடிவெடுக்கும்வரை விற்பனை வரியினை நிறுத்தி வைக்கவும் உறுதியளித்துள்ள மாண்புமிகு தமிழக முதல்வர் **பொன்மனச்செம்மல்** அவர்களுக்கு எங்கள் சங்கத்தின் சார்பிலும் மீனவ சமுதாயத்தின் சார்பிலும் உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## அண்ணா மீன்பிடி தொழிலாளர்கள் சங்கம்

சென்னை - செங்கை

---

ஏழைகளின் தெய்வம் டாக்டர் புரட்சித்தலைவருக்கு நன்றி!

இரால் மீன்மீது விதிக்கப்பட்டுள்ள விற்பனை வரியினை மறுபரிசீலனை செய்யவும் அதுவரை அரசு ஆணையை நிறுத்தி வைக்கவும் உறுதியளித்த ஏழையின்தெய்வம் மீனவர்களின் உண்மையான நண்பர் **டாக்டர் புரட்சித்தலைவர்** அவர்களுக்கு மீனவ சமுதாயத்தின் சார்பில் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்

## இரால் மீன் ஏற்றுமதியாளர்கள் மற்றும் பணியாளர்கள் சங்கம்

பெரியார் மாவட்டம்

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by at India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 54, Nelson Manickam Road MADRAS—600 029.

மேற்குமாம்பலத்தில்

குணா செவன்ஸ்

## கபாடி போட்டி துவக்கம்

சென்னை, ஏப். 21— சென்னை மேற்கு மாம்பலம் எல்லையம்மன் கோவில் தெருவில் இன்று காலைமுதல்மாலை வரை மாம்பலம்குணாசெவன்ஸ் அணி'யின் 3வது ஆண்டு கபாடி போட்டி சுந்தரமூர்த்தி தலைமையில் நடைபெறுகிறது.

சவுரிராஜன் எம்.எல்.ஏ போட்டியை துவக்கி வைக்கிறார். சைதை துரைசாமி எம்.எல்.ஏ, வளர்மதி எம்.எல்.ஏ. மற்றும் பலர் விழாவில் பங்கேற்கின்றனர்.

ஆமதாபாத்தில் கலவரம்

## துப்பாக்கி சூட்டில் ஒருவர் சாவு

ஆமதாபாத், ஏப். 21— குஜராத்மாநிலம்கோலாப்பூர் பகுதியில் இரு கோஷ்டிகளுக்கு இடையே ஏற்பட்ட கலவரத்தை ஒடுக்க போலீசார் 30 ரவுண்டுகள் துப்பாக்கிச் சூடு நடத்தினர்.

இதில் ஒருவர்இறந்தார் மற்றொருவர்காயமடைந்தார்.

## நாகை ஆஸ்பத்திரியில் மேலும் 2 புதிய பிளாக்குகள்

நாகப்பட்டினம் ஏப்.21- நாகப்பட்டினம் மருத்துவமனையில் தொழுநோய் பிளாக் ஒன்றையும், சித்த மருத்துவ பிளாக் ஒன்றையும் அமைச்சர் அண்டே தொடங்கி வைத்தார். ரூ. 8.5 லட்சத்தில் இந்த பிளாக்குகள் அமைக்கப்பட்டுள்ளன.

இந்த விழாவுக்கு அமைச்சர் வீராசாமி தலைமை வகித்தார்.

★ ஒரு தொழிற்சாலையும் இல்லாத மாவட்டத்திற்கு மட்டுமே மத்திய அரசு சலுகையா?

### சலுகை வழங்குவது பற்றி ஆலோசிக்க

# மத்திய அரசு குழு அமைப்பு

## உள்துறை அமைச்சர் சவான் அறிக்கை

**பெங்களூர், ஏப். 21- ஒரு மாவட்டத்தில் ஒரு தொழிலும் இல்லை என்றால்தான் மத்திய அரசு சலுகை அளிக்கும் என்ற முறையை மாற்றவேண்டும் என்று தென்மாநில முதல்வர்கள் கூட்டத்தில் வலியுறுத்தப்பட்டது. இதுபற்றி மத்திய அரசு கமிட்டி ஆலோசித்து வருகிறது என்று மத்திய அமைச்சர் சவான் கூறினார்.**

தென் மாநிலங்கள் குழு கூட்டம் பெங்களூரில் நடந்தது. முதல்வர் புரட்சித்தலைவர் சார்பில் சட்ட அமைச்சர் பொன்னையன் இதில் கலந்து கொண்டார்.

கருநாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டே, ஆந்திர முதல்வர் என்.டி.ராமராவ், கேரள முதல்வர் கருணாகரன் பாண்டிச்சேரி முதல்வர் பரூக்மரக்காயர் ஆகியோர் கலந்துகொண்டு கருத்துக்களைத் தெரிவித்தனர்.

மத்திய உள்துறை அமைச்சர் எஸ். பி. சவான் பேசும் போது கூறியதாவது:-

ஒரு மாவட்டத்தில் ஒரு தொழிலும் இல்லாவிட்டால்அந்தமாவட்டத்தில் புதிய தொழில் தொடங்க மத்தியஅரசு மானிய உதவி அளிக்கும் திட்டம்பற்றிகூறினார்கள்

ஏற்கெனவே ஆறாவது ஐந்தாண்டு திட்டத்தில் மானிய உதவி அளிக்கப்பட்டது.

மேலும்ஓராண்டுக்குஇது (மானியஉதவி அளிப்பது) நீட்டிக்கப்பட்டுள்ளது.

மத்திய அமைச்சர்கள் கொண்ட கமிட்டி இது குறித்து ஆலோசித்து வருகிறது.

ஒரு மாவட்டம் என்பதை மாற்றி ஒரு தாலுகாவில் என்று திருத்தி ஒரு தாலுகாவில் உருப்படியான தொழிற்சாலை ஏதும் இல்லை என்றால், புதிய ஆலைதுவங்கமத்தியஅரசு மானிய உதவி அளிக்க வேண்டும் என்ற கருத்து மாநில முதல்வர்களிடையே உள்ளது.

இவ்வாறு சவான் கூறினார்.

பெங்களூரிலிருந்து பாண்டிச்சேரிக்குப் பெருமளவில் மதுபானம் கடத்தப்படுவதாகவும், சந்தனக்கட்டை, பட்டுத்துணிகள் ஆகியவை கடத்தப்படுவதாகவும் கருநாடக அரசு கூறியதாக சவான் கூறினார்.

தென் மாநில முதல்வர்கள் கூட்டம் அடிக்கடி கூட வேண்டும். ஆண்டுக்கு 2 தட்வையாவது கூடுவது அவசியம் என்று கூட்டத்தில் வலியுறுத்தப்பட்டது.

கல்பாக்கம் அணுமின் நிலையத்தின் முதல்யூனிட் மின்சாரம் முழுவதும் தமிழ்நாடே பயன்படுத்திக் கொள்ளும்.

2 வது யூனிட்டில் பாதியைத் தமிழகமும் மீதியை பிற மாநிலங்களும் பயன் படுத்திக் கொள்ளும் என்றும் சவான் கூறினார்.

### அடுத்த கூட்டம்

இ.காங்கிரஸ் அல்லாத மாநிலங்களுக்கு பாரபட்சம் காட்டப்படுவதாக கூட்டத்தில் தெரிவிக்கப்பட்டதா என்று ஒரு நிருபர் கேட்டபோது "அப்படி யாரும் கூறவில்லை" என்று சவான் பதிலளித்தார்,

அடுத்தகூட்டம் ஐதராபாத்தில் நடைபெறும் என்றும் அவர்சொன்னார்.

திருச்செந்தூர் தேர்தல்:

## 3 வாரியத் தலைவர்கள் பிரச்சாரம்

சென்னை, ஏப். 21- வீட்டு வசதி வாரிய தலைவர் திருப்பூர் மணிமாறன், குடிசை மாற்று வாரியத் தலைவர் என் வி. என். செல்வம், குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் உக்கம்சந்த் ஆகியோர் திருச்செந்தூர் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் தனுஷ்கோடி ஆதித்தனுக்கு ஆதரவு கேட்டு 21, 22ந் தேதிகளில் பிரச்சாரம் செய்கின்றனர்.

## குஜராத் தற்காலிக ஆளுநராக கோகுல கிருஷ்ணன்

ஆமதாபாத், ஏப். 21- சென்னை உயர் நீதிமன்ற நீதிபதியாக இருந்த பி. ஆர். கோகுல கிருஷ்ணன் முன்பு குஜராத் உயர் நீதிமன்ற தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்டு பொறுப்பேற்றுக் கொண்டார்.

இப்போது குஜராத் ஆளுநராகஇருந்த பி.கே. நேரு ஓய்வு பெற்றுவிட்டார். புதிய ஆளுநர் நியமிக்கப்படவில்லை. புதிய ஆளுநர் நியமிக்கப்படும் வரை கோகுல கிருஷ்ணன் ஆளுநராக பொறுப்பேற்றுக் கொண்டார்

இந்த பதவி ஏற்பு விழா எளிமையாக நடைபெற்றது. குஜராத் முதல்வர் சோலங்கி, சபாநாயகர் நட்வர்லால் ஷா, எதிர்கட்சிதலைவர் சிமன்பாய்படேல், தலைமைச் செயலாளர் சிவஞானம் மற்றும் அதிகாரிகள் கலந்து கொண்டனர்.

# இந்திரா காங்கிரஸ் தலைவரை சுட்ட 3 பேர் பிடிபட்டனர்

**அமிர்தசரஸ், ஏப். 21 அகில இந்திய இந்திரா காங்கிரஸ் தலைவரை சுட்டதாக சந்தேகிக்கப்படும் மூவரை போலீசார் கைது செய்தனர். அவர்களிடமிருந்து வெடிகுண்டு துப்பாக்கிகள் பறிமுதல் செய்யப்பட்டன.**

அகிலஇந்திய இந்திரா காங்கிரஸ் செயலாளர் ஆர். எஸ். பாட்டியா பஞ்சாபிலுள்ள தனது வீட்டில் பார்வையாளர்களுடன் பேசிக்கொண்டிருந்தபோது 2மர்மமனிதர்கள் அவரை துப்பாக்கியால் சுட்டுவிட்டு தப்பி ஓடிவிட்டனர். இதில் படுகாயம் அடைந்த அவர் சிகிச்சைக்காக மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளார்.

பாடியாவின் நண்பர் ஒருவர் மர்மமனிதர்கள் சுட்ட போது குண்டு பாய்ந்ததால் மரணம் அடைந்தார்.

இந்த சம்பவத்தை தொடர்ந்து போலீசார் சீக்கியர்களின் பொற்கோவிலிலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் நேற்று அதிகாலை 2 மணிக்கு திடீரென்று சோதனை நடத்தினார்கள். 2 மணி நேரம் இந்த சோதனை நடந்தது. பொற்கோவில் பகுதிக்கு சென்ற போலீசார் உள்ளேயிருந்து யாரையும் வெளியே விடவில்லை. சீக்கிய பக்தர்களும் அதிக அளவில் உள்ளே இருந்தனர். அவர்களை உள்ளே இருக்கும் படி கூறிவிட்டு சுமார் 500 போலீசார் துருவித்துருவி சோதனைப்போட்டனர்.

அப்போது சீக்கிய தீவிர வாதிகள் 3 பேர் உள்ளே பதுங்கி இருந்தனர்.

பதுங்கியிருந்த 3 தீவிர வாதிகளும் கைதுசெய்யப்பட்டனர். அவர்களிடமிருந்து ஒரு துப்பாக்கி, மற்றொரு கைத்துப்பாக்கி ஆகியவற்றையும் போலீசார் பறிமுதல் செய்தனர். வெடிகுண்டு ஒன்றும் கைப்பற்றப்பட்டது.

தொடர்ந்து போலீசார் இது சம்பந்தமாக தீவிரமாக விசாரணை நடத்தி வருகின்றனர்.

பொற்கோவிலில்போலீசார் சோதனை நடத்தியதற்குஅகாலிதள தலைவர் லோங்கோவால் கண்டனம் தெரிவித்துள்ளார்.

பொற்கோவிலில் இது போன்று சோதனை நடத்தினால் பஞ்சாபில் எப்படி சுமுகமான சூழ்நிலை ஏற்படும் என்றும் அவர் கேட்டிருக்கிறார். போலீசாருக்கு சந்தேகம் ஏற்பட்டால் அவர்கள் குருத்வாரா பிரபந்த கமிட்டியிடம் கூறியிருக்க வேண்டும் என்று அவர் கூறியிருக்கிறார்.

பால்கமிஷன் அறிக்கை

திருட்டு:

## கருணாநிதி வழக்கு ஒத்திவைப்பு

சென்னை, ஏப். 21- பால்கமிஷன் அறிக்கை திருட்டு சம்பந்தமாக கருணாநிதி மீதான வழக்கு எழும்பூர் தலைமை நீதிமன்றத்தில் நீதிபதி ஆர்.மாணிக்கம் முன்னிலையில் விசாரணைக்கு வந்தது.

கருணாநிதியைக் கைது செய்ய உயர்நீதி மன்றம் இடைக்கால தடை விதித்திருப்பதால் வழக்குவிசாரணையை அடுத்தமாதம் 25-ந் தேதிக்கு நீதிபதி மாணிக்கம் ஒத்திவைத்தார்.









# திருச்செந்தூர்

# நாடாளுமன்ற தொகுதி

## வாக்காள பெருமக்களுக்கு

### மாண்புமிகு டாக்டர்

# புரட்சித்தலைவர் அவர்களின்

# வேண்டுகோள்



என்னை வாழ வைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே!
என்னை வழி நடத்தும் பெரியவர்களே.....
என் ரத்தத்தின் ரத்தமான உடன் பிறப்புகளே.....

24-4-1985 அன்று நடைபெற உள்ள இடைத்தேர்தலில் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக ஆதரவு பெற்ற

இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்

## திரு. தனுஷ்கோடி ஆதித்தன்

அவர்களுக்கு

### "கை" சின்னத்தில் வாக்களிக்குமாறு

உங்களை எல்லாம் நேரில் சந்தித்து கேட்டுக்கொள்ள பெரிதும் விரும்பினேன். எனினும் நீண்ட தூர பயணங்களை தவிர்க்க வேண்டுமென மருத்துவர்கள் கண்டிப்பாக தெரிவித்து விட்டனர். எனவே எனது இந்த வேண்டுகோளை நேரில் வந்து உங்கள் ஒவ்வொருவரிடமும் விடுகின்ற அன்பு அழைப்பாகவே கருதிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கடந்த பொதுத் தேர்தலில் தமிழக வாக்காள பெருமக்கள் அளித்த வெற்றி அமெரிக்காவில் சிகிச்சை பெற்று வந்த எனது உடல் நிலையிலும் மன நிலையிலும் மிகப் பெரிய முன்னேற்றத்தை ஏற்படுத்தியது. அதுபோல் திருச்செந்தூர் நாடாளுமன்ற தொகுதி இடைத்தேர்தலில் நீங்கள் அளிக்கின்ற வெற்றி எனக்கு மேலும் உற்சாகத்தை அளித்து என் பணிகளில் என்னை மேலும் ஊக்குவிக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கும் கடந்த பொதுத் தேர்தலில் தமிழக மக்கள் அளிததிட்ட ஆதரவு அவற்றின் திட்டங்களுக்கும் - கொள்கைகளுக்கும் தான் என்பதை மீண்டும் எடுத்துக் காட்ட திருச்செந்தூர் நாடாளுமன்ற தொகுதி வாக்காளராகிய உங்களுக்கும் ஒரு வாய்ப்பு கிட்டியுள்ளது.

இந்திய ஒற்றுமையை கட்டிக்காக்கவும்,வளர்ச்சி திட்டங்களை தடையின்றி நிறைவேற்றவும், முற்போக்கான பாதையில் நாடு தொடர்ந்து முன்னேறவும், மத்திய-மாநில அரசுகளிடையே சுமுகமான உறவு மேம்படவும் திருச்செந்தூர் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்

**திரு. தனுஷ்கோடி ஆதித்தன்** அவர்களுக்கு

நான் நேரில் வந்து வேண்டிக் கொண்டதாகவே கருதி

"கை" சின்னத்தில் வாக்களிக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.



அன்பன்,

## எம்.ஜி.ராமச்சந்திரன்

சென்னை,
21-4-85.

வெளியீடு: தலைமைக் கழகம், அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம்.